# கவிமலர்

1998

திரு. சா. கணேசன் அவர்கட்கு:

'அன்பளிப்பு'

வெ. அரங்கராசன்.
12.12.57.

சுவாமி விவேகானந்த வித்யாலயம்

உயர்நிலைப்பள்ளி

வைரிசெட்டிப்பாளையம்

---

# கலை விழா

செப்டம்பர் 7, 8, 9

1951

வெளியிட்டோர் :

**S. R. நாகரெட்டியார் அவர்கள்**

தலைவர்

விவேகானந்த வித்யாலயம்

வைரிசெட்டிப்பாளையம்

# பதிப்புரை.

---

கருதற்கினிய கலைமகள் பொன்னடிகட்கும் தமிழ் அன்பர்கட்கும் வணக்கம்.

"விவேகானந்த சேவாலயம்" என்ற நிர்வாகத்தின் கீழ் அமைந்து 1950 ஆம் ஆண்டு ஜூன் திங்களில் நிறுவப்பட்டது இவ்வுயர்நிலைப்பள்ளி. இஃது ஓராண்டு சீர் பெற்று, வளர்ச்சியுற்று, தற்பொழுது ஈராண்டு எய்தி இளஞாயிறே போன்று வளர்ந்துவரும் குழவிப்பருவத்தில் உள்ளது.

இவ்வாண்டு கலைமகள் பூசையைத் தக்க முறையில் நடத்துவான் வேண்டி கலைவிழா என்ற தமிழ் மணம் கமழும் விழா ஒன்று துவக்கப்பட்டது. அவ்விழாவின் மணத்தை நாங்கள் நுகர்ந்தவாறே தமிழ் அன்பர்கள் அனைவரும் ஒருங்கே நுகர்தற்கு விழாநிகழ்ச்சிகளை ஒருங்கு திரட்டி உவப்புடன் உங்கட்கு அளிக்கின்றேன். அவைகளின் எழிலையும் மணத்தையும் உள்ளங் குளிர அள்ளிப் பருகுவீர்களாக.

1951ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஏழாம் நாள் அருட்டிரு சித்பவானந்தா அவர்கள் அரிய தலைமையில் அருட்டிரு ஐயாறு அடிகள் அவர்கள் அளித்த இயல் என்னும் தனிமலர் ஒன்று.

மறுநாள் 8—9—51 காரைக்குடி அழகப்பா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திருவாளர் ஆ. முத்துசிவன் அவர்கள் M. A. சீரிய தலைமையில் அரங்கேற்றப்பட்ட கவிகள் முறையே:

காரைக்குடி அழகப்பா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் வித்துவான் கா. தேசிகன் அவர்கள் அன்புடன் அளித்த இன்பக் கவினுர் கலைமலர் ஒன்று.

இரண்டாவதாக, திருச்சிராப்பள்ளி E. R. உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் கலைஞர் திருவாளர் வித்துவான் வி. துரைசாமி அவர்கள் விருப்புடன் தந்த சிறப்புறு கவிமலர் அடுத்த தொன்று.

மூன்ருவதாக, காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திருவாளர் வித்துவான் ந. சுப்புரெட்டியார் அவர்கள் M. A.; B. SC.; L. T. இசைந்துகொடுத்த கலைமலர் இன்னென்று.

நான்காவதாக வேலூர் கந்தசாமி கண்டர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் திருவாளர் வித்துவான் இராமராசன் அவர்கள் செவ்விய தமிழில் சீர்பெறத் தீட்டியீந்த கலைமலர் மற்ருென்று.

ஐந்தாவதாக, செவந்தாம்பட்டி நிலக்கிழார் திருவாளர் பெ. இராமானுஜ ரெட்டியார் அவர்கள் எளிய தமிழில் அருளிய கலைமலர் மற்ருென்று.

இறுதியாக இப்பள்ளித் தமிழாசிரியர் திருவாளர் வித்துவான் ச. கணபதி அவர்கள் எளிய தமிழில் இயற்றி வழங்கிய கலைமலர் மற்ருென்றென அமைந்தனவாகும்.

மூன்ரும் நாள் 9—9—51ல் திருச்சிராப்பள்ளி கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் சீரிய தலைமையில் திருச்சிராப்பள்ளி ஜமால்மொய்தீன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. வே. சிவகுருநாதன் அவர்கள் M. A. நல்கிய " கூத்து " என்னும் நறுமலரோடு மாணவர்களின் கதம்ப நிகழ்ச்சியுடன் இம்மலர் இனிதுமுடிவுறுகின்றது. இரண்டாம் நாள் அரங்கேற்றப்பட்ட கவிகளே இந் நூலில் இடம் பெற்றுள்ளன.

இதுபோன்று ஏனைய இரண்டுநாள் நிகழ்ச்சிகளையும் விரிவாக வெளியிட சந்தர்ப்பங்களும் சூழ்நிலையும் இசையவில்லை என்பதைக் கூறி அமைகிறேன்.

வணக்கம்.

வைரிசெட்டிப்பாளையம் 5—12—51. } வெ. அரங்கராசன் பதிப்பாளர்.

## விவேகானந்த வித்தியாலயம்
## வித்துவான் கா. தேசிகன்

# கலை

---

உண்மையொன்றே கடவுளெனச் சொன்ன காந்தி
உத்தமனார் திருவடிக்கு வணக்கம் போற்றி.

1. கலைவிளக்கும் கம்பனுக்கே விழாவெடுக்கும்
கணேசனுக்கும், கவியரங்கத் தலைவன்-எங்கள்
குலவிளக்காய்க் கவிதைநலங் கூறுசெம்மல்
கொண்டாடு முத்துசிவன் அடிக்கும், இங்கே
நலம்பயக்கத் தொழில்புரியுங் கலைஞன் எங்கள்
நாகரெட்டி நண்பர்க்கும், அவையினர்க்கும்,
தலைவணங்கித் தமிழ்வணங்கும் கவிஞர் செய்ய
தாள்வணங்கி நிற்கின்றேன் தெய்வம்போற்றி.

2. வில்வளைத்துத் தொடுத்துவிட்ட கூர்வாய் அம்பு
விரல்நொடிப்பில் யானையொன்றை வீழ்த்திப் [பின்னர்
கொல்லுகின்ற புலியழித்து மானைக்கொன்று,
குமுறிஎழும் பன்றிதலைப் பிளந்து (உ) டும்பைப்
புல்லிநின்று கலைவிளக்க ஓரிமன்னன்
புரிந்திட்ட கொடைப்பெருமை நாட்டிலுள்ளீர்
கொல்லிமலைச் சாரலிலே வாழ்வதற்குக்
கொடுத்துவைத்த நல்வினைக்கு வணக்கம்சொன் [னேன்.

3. கணப்பொழுதில் பல்பொருளை உருவிச்சென்று
கருதியதைக் கடைக்கூட்டி வைக்கும் ஆற்றல்
மணக்குமுயர் கலைக்குரிய மாண்பே என்று
மன்னரிலே கொடைசிறந்த வல்வில்ஓரி,—
கணக்கறியா தள்ளிவிடும் கனகமாரி -
கவிஞர்கட்கே பரிமாறிக் களிக்கும் வாரி.
இணக்கமொடு செங்கரத்தால் வில்வளைத்தே
இழுத்துவிட்ட அம்பொன்றே எழுதிக்காட்டும்.

4. அம்பலவன் திருக்கூத்தும், பொன்னியம்மை
அடிவருடப் பள்ளிகொள்ளும் பெருமான்செய்ய
செம்பதுமத் திருக்கண்கள் உறங்குவான்போல்
செய்கின்ற யோகநிலைத் துயிலும், எங்கள்
நம்பிள்ளை வாய்மொழிக்கு வகுத்துரைத்த
நாலொன்பா னுயிரத்தின் படியும்சென்று
சிங்கம்போல் முழங்கியஎம் விவேகானந்தன்
செஞ்சொல்லும் சிரஞ்சீவிக் கலைகளன்றோ!

5. காமத்தை நெறிப்படுத்திக் காவல்செய்ய
காதலெனும் பேருணர்வுக் கலைகள் பொங்கிப்
பூமிக்குத் தாஜ்மஹால் போன்ற காட்சிப்
புதுமலர்கள் குலுங்கிடுமே – பொல்லாக்காமம்
தீமுற்றிச் சாபமெனெ உடலைச் சாய்த்துச்
சிரித்திடுமே கொல்லிமலைப் பாவையாக
நாமத்தைப் படைத்ததற்கோர் வடிவந்தந்து
நாட்டியகை-கலைநுட்பம் நவில்கையன்றோ!

6. அழகுணர்ச்சி முற்றியபின் உயிர்குடிக்கும்
அழிவுணர்ச்சிக் கலைகிமோர்க் காகுமென்றே
பழகியநல் தமிழ்ப் பரணர் பதுமையாகப்
பாராட்டுங் கொல்லிமலைப் பாவைதன்னை
மழையிடித்துப் புயல்எறிந்து புடைத்தபோதும்
மாயாத படியமைத்த கலைக்கீடுண்டோ
வழிவகுத்தான் புத்தன்அருள் பாதபீடம்
வைத்தமலர் என்றென்றும் வாடமாட்டா.

7. எழில்உடைய கலைநுட்பம் தேர்ந்துகண்டார்
எண்ணத்தைச் சடப்பொருளில் பிசைந்துருட்டித்
தொழில்புரிய வைத்திட்டார் நாயைக்கண்டால்
தோன்றுகின்ற கல்லுணர்வு தோன்றுதன்றே
பழிபிருந்த முனிவரெலாம் தொடர்ந்துசுற்றப்
பழங்குடுமி யாமலையில் சிற்பமாக
எழுந்தருளும் மோகினியார் வடிவம்ஒன்றே
இன்பநிலைக் கலைவிளக்கம் செய்தல்காண்பீர்.

8. கிள்ளுந்தீக் கொடுங்காட்டில் கிடக்கும் ஓந்திக்
கிளர்ச்சிபெற யாழ்தொட்டு மீட்டபாணன்
துள்ளுஞ்சீர் இசைகேட்டு மரத்தில்ஏறத்
தொடங்குநிலை இசைக்கலையில் எதனைக்காட்டும்
உள்ளத்தே மறைந்துநிற்கும் ஆற்றல்எல்லாம்
ஒழியாத பயிற்சியினல் உடம்பில் ஏறி
வெள்ளம்போல் ததும்புநிலை பெற்றபோது
விரல்நுனியே வாய்திறந்து பாடக்காட்டும்.

9. உளம்சிதறிக் கொடு வினைகள் செய்வதற்கே
உலகத்தைப் படைத்ததுபோல் மக்கள்வாழக்
களங்கநெறி யென்றுணர வைத்தபின்னர்க்
கைதூக்கி விடுகின்ற கல்லும் சொல்லும்
விளங்குகலைப் பொருளாகி இருள்நடக்க
விளக்காகி விஞ்ஞானப் பயனும்ஆகி
வளங்கனியச் செய்திடுமேல், இந்தஞாலம்
வானுலகம் கலையளித்த வாழ்வின்வெற்றி.

10. இவ்வுலகம் வானுலகாய் மாற்றுகின்ற
ஈசாப்புக் கதைகளொடு ராமகிருஷ்ணர்
திவ்வியநல் உவமைகளும் மார்க்ஸிம் கார்க்கி
திடம்பெற்ற "அன்னை"எனும் தெளிந்தநூலும்
செவ்வியநல் வழிகாட்டுங் கலைகள் என்ற
சிறப்புக்கே எடுப்பான நூல்கள்ஆகும்
எவ்வெவர்க்கும் வாழ்வுநிலை ஒன்ருய்க்காட்டி
இயங்குமன நிலைபலவாய்க் காட்டல் நன்றே.

11. பழங்கருத்தைப் பொடிசெய்து சீனிசேர்த்துப்
பாமரர்கள் மனந்திரிக்க நஞ்சைச் சேர்த்து
வழங்குகின்ற கலைஞானம் பரவிஎங்கும்
வாதநோய் கொண்டுலகை முடக்கக்கண்டோம்
குரங்குமுள்ளில் அகப்பட்ட சேலைபோலக்
குண்டர்களின் வேதாந்தத் திடையேமக்கள்
களங்கமுறக் கிடக்கின்ருர் யூனஸ்கோ மன்றம்
கைதூக்க முயன்றிடுமே கலைக்கண் கொண்டே.

12. பல்வேறு மனத்தகத்தே நுழைந்து பார்த்துப்
பரவியதில் திளைத்திருக்கும் ஒருமைதன்னை
வல்லார்கள் கடைந்தெடுத்துக் குணங்கள்கூறி
வடித்ததெல்லாம் கலைப்பெயராய் வாழ்வுகாட்டும்
எல்லாரும் வசமிழந்தே இன்பந்தேங்கி
ஈடற்ற உணர்வொன்றாய் இணைந்துநிற்பர்
கல்லாருங் கற்றாரும் கலைக்குட் சென்றால்
காணாத பொருள்ஒன்று மனந்தான் கண்டோர்.

13. திறந்த வெளிக்காற்றினிலே எரியுந்தீபம்
தினகரனும் விண்மீனும் மனிதனோடு
பிறந்தமனச் சலனத்தை யஞ்சி எட்டிப்
பிரிந்திருக்கக் கண்டறிந்த பெரியோர் ஆசை,
துறந்தவராய் உள்ளத்தைத் துடைத்த பின்னர்
தோன்றுவன கலைப்பெருக்காய் இன்பங்கூட்டும்
இறந்ததனை மறக்கடித்து நிகழ்காலத்தே
எதிர்காலப் பயன் சேர்க்கத் துடித்துநிற்கும்.

14. நடைபயின்ற சூரியனார் நாட்காலை வந்தவுடன்
கடைதிறப்புச் செய்கின்ற கலைப்பொருளும்
[தாமரையே.

15. படையமைந்த பல்லரண்கள் பாய்ந்துமுட்டும்
[கோபுரங்கள்
தடையறச்செய் பாட்டாளிக் கைத்தழும்பும்
[தாமரையே.

16. குடைகவிக்கும் மன்னரையும் குற்றேவல்
[செய்விக்கும்
தொடையளித்த தொல்புலவர் செந்நாவும்
[தாமரையே.

17. படியளந்தான் பாதத்தின் பாதுகையாம் வள்ளுவன்
[சொற்
படிநடந்தார் உள்ளந்தான்பரவியெழும் தாமரையே.

18. உள்ளதன்றி வேறறியா ஊமச் சிறு குழந்தைக்
கள்ளமற்ற கண்ணும் கலைப்பொருளும் தாமரையே.

19. கொல்லும் வறுமையிலும் கொள்கை பிழையாது
சொல்லுகின்ற ஆசான் சுனைபூத்த தாமரையே.

20. பாடப் பொருளில் மனம்பதிக்கும் மாணுக்கர்
தேடிக் கலைநாடுந் தேன் பொதிந்த தாமரையே.

21. தீதற்ற வாழ்வின்பம் தேடுகின்ற கன்னியரின்
காதற் கடல்முளைத்த கண்ணிரண்டும் தாமரையே.

22. ஓதுங் கலைவெள்ளம் ஊற்றெடுக்க நாகுரெட்டி
போதம் மலர்த்தும் பொருள்பிறந்த தாமரையே

23. புத்துணர்வுப் பாலோடு பொங்கு தமிழ்த் தேன்
[கலக்கும்
முத்துசிவன் நூலெல்லாம் முளைத்தெழுந்த
[தாமரையே.

24. உள்ளக் கடல் பூத்தே உலகெங்கும் ஆட்டிவரும்
வெள்ளைக் கமலந்தான் வேதக் கருப்பொருளே

25. தாமரையே கண்ணுகக் கையாகத் தாளாகக்
காமுறவே சேவித்த காட்சிக் கலைப்பொருளே.

திருவாளர். வித்துவான் வீ. துரைசாமி

## கலை

அகிலம் புரக்குமெங்கள்
அம்மை கலைமகள்தான்,
மாக்கள் நிலைமாறி
மக்களாய் வாழும்வகை
ஆக்கி அனைத்திலுமே
அணுவாய்க் கலந்துநிற்கும்
விந்தைக் கலைக்குமரி
வெற்றி விழாநாளாம்
இன்று,
கொல்லிப் பனிவரையாம்
கோமகளார், மூன்றுதமிழ்
வல்லமைக்குச் சான்றாக
வானவன் என்னும்பெயரில்
சேரன் அணைத்துநின்ற
சிங்காரச் சீமாட்டி
வாரி வழங்கிநிற்கும்
வாலைக் குமாரியவள்
சீராட்டித் தாலாட்டச்
செம்மாந்து பொங்குமிந்த
வைரிசெட்டிப் பாளையத்தின்
ஆசார வாசலிலே,
வாழ்த்துக்கள் கூறி

வரவேற் பெழுதியொட்டி
விழவெடுத்துக் கொண்டாடும்
வித்தகத்துக் கவியரங்கில்
பழகு தமிழ்க்கவியைப்
பாடிக் கலையமுதில்
முழுகியின்பம் ஆர்ந்திடவே
முன்னேறி வந்துநிற்கும்
செஞ்சொற் கவிஞன்யான்,
சித்தம் மலர்ந்துவிடக்
கற்றுத் துறைபோகிக்
கலைக்கள்ளை மாந்திஅரு(கு)
உற்றே யமர்ந்திருக்கும்
உங்கள் அனைவருக்கும்
வந்தனைகள் கூறுகிறேன்:
வணக்கம் உரித்தாக;
ஆன்றோரே,
வானத் திருந்திறங்கி
வந்து விரிந்துநிற்கும்
தானைத்த பூதங்கள்
தக்கமுறை யிற்கலந்து
ஆன்ம ஒளிபொருந்தி
அத்துவிதம் பேருண்மை
காணக் கணந்தோறும்
கண்சிமிட்டி மின்மினிபோல்
மானிடத்துப் புற்றீசல்
மண்டிக் கருவமொடு

வானிடத்தையும் தங்கள்
வசமாக்க வேமுயலும்
எண்ணக் கருக்கல்
இதயமெனும் வானகத்து
வண்ண ஒளிப்பிழம்பை
வடித்தெடுக்க வற்ருத
வாயசைவில் பேரிடியை
வையமெலாம் ஒலிபரப்பி
ஈரம் உலராச்
சிறகசைத்தே இவ்வுலக
பாரம் அழுத்துமட்டும்
பறந்து பறந்தலுத்துச்
சிறகுதிர்ந்து போய்விடவும்
சின்ன புழுவாகி
ஊர்ந்து, விதிநினைந்து
ஒன்றுமிலாப் பொட்டலிலே
எறும்பென்னும் நண்பர்கள்தாம்
எழவெடுக்க வந்தவர்போல்
கட்டி யழுதுகொஞ்சம்
கண்ணீர் வடித்தபின்பு
சொட்டும் கருணைமிகச்
சுடுகாட்டு வழிநோக்கிக்
கைலாகு தான்கொடுத்துக்
கவுரவமாய் வரவேற்க
அவ்வேளை,
கன்னங் கரியநிறக்

காகத்து இராக்கதரும்
'இந்நேரம் தாமதமேன்?'
என்றே இரைந்துவிட்டுக்
காரலகாம் வாயிற்
கடைதிறந்து மீளாத
சிர்வயிற்று மாளிகையிற்
சேர்ப்பிப்பார், இந்தவிதம்
ஐந்துநிமிஷ உயிர்த்துடிப்பில்
இவ்வகிலம் சொந்தமெனஆக்கிச்
சொகுசு புரிந்துநிதம்
மந்தை வெளியினிலே
மக்கி மடிந்துவிடும்
மானிடமாம் ஈசல்கள்நாம்!
மாருத உண்மையிது
மோன வெளிமுகட்டின்
முன்நின்று சிந்தையினை
ஒப்பற்ற ஒன்றினிலே
ஒட்டி யிருப்பவரே
'அப்படியே உண்மையிது
அவ்வளவும் பேருண்மை'
என்றுணர வல்ல
இயல்புடையார், இந்நிலையில்
இயற்கை பொதித்துவைத்த
இன்ப ரகசியங்கள்,
செயற்கையிலே கண்டுவைத்த
செப்பவொண்ணுக் காட்சிகள்தாம்
எல்லாம் கலையாக

ஏத்தித் தொழுதுவந்தார்
பல்லூழி காலமதாய்.
இன்றைய நாள்,
ஏடு படித்தறியாரேனும் கலையை
என்னபாடு படுத்துகிறார் !
பார்க்கச் சகிக்கவில்லை !
சந்திப் பிழைமிகுந்து
சாக்கடைக் கால்வாய்போல
முந்தி வீழுந்தடித்து
முன்னேறும் இலக்கியங்கள்,
எட்டணா என்னும்எடையில்
இறக்குமதிப் பட்டுவாடாச்செய்து
பாழாக்கும் வீரர்கள் தாம்
கலையின் முகத்திற்
கரிபூசும் அற்புதத்தை
விலைகொடுத்து வாங்குகிறோம் !
விந்தையினை என்சொல்ல !
அழுகிவிட்ட சிற்றுணவை
அமுதென்று ருசிபார்க்கும்
மழுங்கல் ரசிகர்களாய்
மாறிவிட்ட நம்தமிழர்
போற்றி வளர்க்கின்றார்
புன்மை எழுத்தினையே !
நாற்றம் சகிக்கவில்லை !
நல்ல தமிழ்க்கு வந்த
தீங்கை நினைக்கையிலே
திடுக்கிடும் நம் நெஞ்சமெலாம் !

(கலைப்போர்வையில் தொழில்)

கலையினை வாயிற் பேசிக்
சையினிற் காசை வாங்கி
விலையிடும் நிலையில் இன்று
வித்தகம் விளக்கின்றூர்கள் !
கொலையெனும் பெயர் சொல்லாமல்
கொன்றிடும் அறிஞர் தங்கள்
வலையினில் விழாது வாழ்வீர் !
வண்ணஞ் சேர் கலைகாள் நீவிர்!
எழிலுற ஓர் காலத்தே
எங்கள்நாட் டகத்தே வாழ்ந்த
பழுதிலாக் கலைகாள் ! இன்று
பாவியர் கையிற் பட்டீர் !
அழுவதால் ஆவதென்ன ?
பணத்தினுக் கடிமையாக
முழுவதும் மோசஞ்செய்தார்
முன்னணிக் கலைஞர் என்போர்.
நாடகத் துறையி லன்றிச்
சினிமாவில் நாட்டியத்தில்
தேடரும் இசையில் எல்லாம்
தித்திப்பைப் பூசிவிட்ட
சிடைபோல் ஆவீர் ! மேலும்
செழிப்பினை இழந்துவிட்டீர் !
ஆடலும் பாடல்தாமும்
பணத்தினுள் அழுந்திநின்றீர் !

ஏழிசை யாகி யின்பத்
தமிழினில் மூவர் பாட
யாழினில் இயங்கி னீர்கள்
நாட்டியம் யாவும் வந்த
தோழியாம் மாதவிப் பேர்த்
தோகையின் மடிவளர்ந் தீர்!
ஆழியில் கரைத்து விட்ட
பெருங்காயம் ஆனீர்! இன்றே
ஆங்கில வாணர் போல
உடுப்பினை யணிந்துவிட்டால்,
ஓங்கியே ஆங்கிலத்தில்
ஒன்றிரண் டுளறி விட்டால்,
வாங்கிய பணத்திற் காக
வசையினை வாரிவிட்டால்
நாங்களும் 'கலைஞர்' என்ற
நற்பெயர் நாட நிற்போம்!
விழலுக்கு நீரைப் பாய்ச்சும்
விதத்தினில் கலையைத் நித்தம்
தொழிலுக்குப் பயன்படுத்தித்
தொந்தியைக் கொழுக்க வைப்பார்!
கழலுக்குச் செருப்போ அன்றிச்
செருப்பிற்குக் கழலோ சாற்றிர்!
நிழலுக்கு வழியில் லாமல்
தவிக்கின்றீர் கலைகாள் நித்தம்.
உண்மையாய்க் கலைத்தொண் டாற்ற
உளங்கொளின், முதலாய்ப்போட
அண்மையில் பணமோ இல்லை!
அருநிதி கிடைக்க வேண்டின்

1998



பெண்மைபோல் நடித்துப் பேசிப்
பெரிதும் வால் பிடிக்கவேண்டும்!
திண்மையாம் உறுதிதன்னைத்
தெருக்காற்றில் தூற்றவேண்டும்.
நவரசம் ஏட்டிலன்றி
நாடகம் சினிமா வெங்கும்
கவசமிட்டது போல் காண
வேண்டுமேல் கழறுவேன்யான்
அவசியத் தளவுமீறி
நடிகர்க்குப் பணத்தை யள்ளித்
திவலைபோல் தெளித்தீர்! உங்கள்
தேசுதான் வளர்ந்த துண்டோ!
பாமர மக்கள் உள்ளம்
பன்னுடை போன்ற தன்றோ?
காமத்தை, குடியை முன்னால்
காட்டிப்பின் அதனால் வந்த
தீமையை விளக்கி னாலும்
முன்னவை தித்திப்பாகப்
போம்இதை விளக்க வேண்டா!
புதிதல்ல தமிழ் நாட்டிற்கே.
நடிகரில் சிலரை விட்டால்
நாடகம் சினிமா வெங்கும்
குடிமுழு கிப்போம் என்ற
குருட்டெண்ணம் கொண்டு நாளும்
முடிநரைத் துடல் தளர்ந்து
முற்றிலும் சிலரை யட்டும்

மடிபிடித் திழுத்துப் போடும்
பாதகம் மடிய வேண்டும்.
சான்றோரே,

இல்லத்துக் கீரையல்ல எளிதாய்ப் பறிப்பதற்கு,
அல்லும் பகலும் அழகை அனுபவித்துப்
பேருணர்வில் ஆழ்ந்த பெரியோர்கள் அல்லாமல்
யாரும் கலையறிவை யாங்ஙனம்உய்த் துணரவல்லார்?
புத்தம் புதிய உடையிலோ, காரிகைகள்
வித்தாரத் தோற்றத்து வீம்பினிலோ,
சீட்டாடும் திண்ணை மருங்கினிலோ,
தினம் சினிமாப் பார்ப்பதிலோ,
கலைவளர்ச்சியில்லை! கருத்துத் தெளிவோடு
தொல்லறிவுப் பாதையிலே
தொலை தூரம் சென்றபின்பு
மெல்ல அனுபவிக்கும்
மேன்மையோர் தம்மிடமே
உண்மைக் கலையனைத்தும்
ஓங்கிவளர்ந் திடுமால்

---

திருவாளர். வித்துவான், ந. சுப்பு ரெட்டியார் M. A., B. SC., L. T.,

# கலை

---

1. " இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகளியற்றல்
அன்ன சத்திர மாயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம்கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறிவித்தல்,''

2. என்று புதுமைக் கவிஞ ரியம்பிய
இன்சொல் நன்றெனஎண்ணி வளர்கலை
மன்று கண்டயெம் மாப்புகழ்ச் செல்வனே !
மதிப்பு நீடிய மலையில் விளக்கதாய்
நின்றி லங்குநா கய்ய நம்பியே
நிறை தமிழ்க்கலை ஆங்கிலம் என்பவை
நன்று கற்று நயம்பெற நவின்றிடும்
நாவல ! சபை நாயக ! வந்தனம் !

3. காவியமும் நல்லிசையும்
கருத்திர்க்கும் நாட்டியமும்
ஓவியமும் உட்கொண்ட
உயர்கலையின் பெருக்கத்தை

4. அள்ளியுண, நல்லின்ப
ஆழியிலே சுகித்திருக்க
வெள்ளம்போல் திரண்டெழுந்த
மேதக்க தமிழன்பீர் !

5. கலையின் மகத்துவத்தைக்
காட்டவந்த பெரும்புலவீர் !
தலைதாழ்த்தி என்வணக்கம்
தந்திடுவன் ஏற்றிடுவீர்

6. அறிவியற் கலையும்
ஆய் மொழிக் கலையும்
திறனாய் வென்னும்
சிறப்புறு கலையும்
என்னுளம் ஈர்க்க
ஈடுபா டுற்றேன்
இன் கவிக் கலைப்ப
ஏனோ மறந்தேன்.

7. மறந்த என்னை வழிமறித் தீர்த்து
சிறந்த முறையில் கவிதைகொழிக்கும்
அரங்க மேற்றி அருளிய அன்பீர்
கரங்கள் கூப்பிஎன் கவிதை சொல்வனே.

8. உள்ளத்தே எழுகின்ற
உணர்வென்னும் வெள்ளத்தைப்
பள்ளமெனும் கீழ்த்தலத்தில்
பாய்ந்துவிடா தணையிட்டு

விள்ளரிய உயர்நிலையில்
மேவிவரச் செயும்போதே
தெள்ளியநற் கலைபிறக்கும்
செப்பரிதாம் அதன்சீர்த்தி.

9. கனவுங் கற்பனையுங்
கலந்ததொரு நிலையில்தான்
மனிதஇனம் போற்றும்
மாண்பார் கலைதோன்றும்.

10. கனவுங் கற்பனையுங்
கலவாது போயிடுமேல்
இனமான கலைகாண
ஏலாது சோதரரே.

11. காலத்திற் கேற்ற கருத்துங் கனவுகளும்
கோலத் திருவடியில் கூட்டி உளங்கவர
ஞாலந் திருந்த எழிலெங்கும் பவனிவர
சாலப் பணிசெய்யுஞ் சதுரே கலையாகும்.

12. ஏற்ற மடைந்திங்கே
இனியவாழ் வெய்துதற்கும்
நாற்றிசையும் போற்றும்
நாகரிகம் ஓங்குதற்கும்
ஆற்றத் துணைசெய்வ
தருங்கலையே ஐயமில்லை.
போற்றிடுவீர் கலையென்னும்
புனிதமிகும் பொக்கிஷத்தை.

13. கண்டதனை கண்டபடி
கட்டுரைத்தல் கலையென்றால்
கண்டதனைக் கண்டவன்போல்
காணூரும் கண்டிடவே
கண்டதனை உண்டுமிழ்ந்துக்
கற்பனையைக் கவினேற்றிக்
கண்டதனை விண்டுரைக்கும்
காரியமே கலையாகும்.

14. உண்மைக் கலைஞன்
ஊர்க்கும்பல் தனில் சேரான்
திண்மை இழந்து விடான்
தெருப்பவனி வாரான்காண்!

15. ஊனுறக்கம் நீத்து
உணர்வுக் கரையமர்ந்து
காணுதற்கும் எட்டாத
காட்சிக்கு வலைவீசி
மாணுறவே தான்பெற்ற
வரிசைகளை வனப்பூட்டிப்
பேணுமனத் துடனே
பெறவைப்பான் பெருங்கலைஞன்.

16. பண்டைத் தமிழர்
பயனுறவே கண்டுதந்த
எண்ணிறந்த கலைஎழிலை
எவ்வா றெடுத்துரைப்பேன்.

17. வாழ்வைக் கலையாக்கும்
மார்க்கத்தைக் கண்டுரைத்தார்
தாழ்வின்றி வையகத்தில்
வாழுஞ் சதுருரைத்தார்.

18. வண்ணத் தமிழ் கொண்டு
வையத்தின் மாண்பையெலாம்
எண்ண இனிக்கின்ற
இன் கவியில் கண்டுதந்தார்.

19. கற்கோவில் கள்கொண்டார்
கவினார்ந்த சிற்பங்கள்
பற்பலவுங் கண்டார்
பாய்ச்சினார் தமிழ்க் கலையின்
பொற்புகளை அன்னவற்றில்
பொலிவுற்றார் புகழுமுற்றார்
தற்கால நாமுற்ற
தாழ்வுதனை என்னென்பேன்.

20. ஏற்றம் இழந்தோம்
ஏதுமற்றோம் மீண்டும்நாம்
ஏற்றமுற வேண்டுமெனில்
ஏத்தும் கலைகளிலே
தேர்ச்சி பெறவேண்டும்
சிந்தை பறிகொடுத்துப்
போற்றி யிடவேண்டும்
புதுமை பெறவேண்டும்.

21. கலையாய்ந்தார் போல்நடிக்கும்
        கயவர்களைக் கடிந்திடுக
    நிலவாது விரட்டிடுக
        நெருப்பிடுக அவர் உரைக்கு.

22. வாழ்வை வழிப்படுத்தும்
        வளர்கலைகள் தந்திடுக
    வாழ்வை அழகுறுத்தும்
        வண்மை நெறி கண்டிடுக.

---

வித்துவான், **S. K.** இராமராசன்.

கம்ப நாடன்

கழல் தலை மேற்கொள்வாம்.

கலையரசி.

கல்விற் சுவையோன் பதும் வுறிய
சுழையி லளவி லிசைப் பெருக்கும்
தெள்ளிக் கொழிக்கும் கலைத்தேவி
சீரா ரடிகட் கென் வணக்கம்.

இணக்கஞ் சான்ற தலைவர்க்கும்
எழி லார் மன்றப் பெரியோர்க்கும்
வணக்கம். அவையீர் ! நுஞ்செவிக்கு
மனத்தைத் திறந்து வைத்திடுமின்.

கலையரசி.

ஒளிசேர் மதியத் திடையரும்பி யுயர்வான் பொழிலிற் போதாகித்
தெளிவார் புலவ ரகம்பொலிவிற் றிகழப் பூத்தாய் கலையரசீ !
தெளிவார் புலவ ரகம்பொலிவிற் றிகழப் பூத்தா யென்றன்றோ
களியார் தருநெஞ் சுடையார்நின் கவினிற் றிளைத்தார் கலையரசீ !

பொன்னித் துறையில் நீராடிப் பொதியப் பொழிலில் விளையாடித்
தென்னற் கினிய சங்கத்திற் றிகழ்ந்தாய் வாழி கலையரசீ !
தென்னற் கினிய சங்கத்திற் றிகழ்ந்த செவ்வி கண்டன்றோ
நன்னித் திலநெஞ் சுடையார்நின் னலத்திற் றிளைத்தார் கலையசரசீ

திறஞ்சா வியலைக் காப்பியற்கும் சிலம்பி னிசையைச் சேரற்கும்
அறஞ்சான் றிடுநா டகங்கம்ப ஞர்க்குந் தந்தாய் கலையரசீ
அறஞ்சான் ஞெளிர்நா டகங்கம்ப ஞர்க்குந் தந்த தாலன்றே
திறஞ் சான்றுயர்நெஞ் சுடையார்நின் றிருவிற் றிளைத்தார்
[கலையரசீ

கலையரசி (1) வாழ்வு

கலைநடஞ்செய் பெருங்கடலும் கலைவளஞ்செய் குளிர்வரையும்
கலைகொழிக்கும் புனல்நதியும் கலையிழைக்கும் பொழில் வயலும்
கலைகுளிருங் கோயில்களும் கலைவடிவார் தெய்வதமும்
கலைவடிவிற் பெற்றுயர்ந்து களிக்கின்ற தமிழகத்தீர் !

கேண்மின் !

அளப்பரும் புகழால் விழுப்ப மெய்திய
நம்முனோ ரருளை நயந்தவ ராதலின்
மாநில மக்கள் மேனிலை யெய்தக்
கலைநலங் கண்டனர் கலைநலம் பேணினர்.

அக்கால்

அன்பென்னும் பெருநிலத்தி லருளென்னுந்
தூணிறுவி யமுத ளாய
இன்பென்னு முத்திரமிட் டெழில்வளருங்
கலைக்கோயி லியற்றி னூரால்
கற்பனையாம் கொடிபடரும் கவின்வளைவி
லிசைக்குயில்கள் களித்து மேவும்
பொற்புருவாம் முற்றிலின்க ணறும்பூவோ

டெழிற் சுண்ணம் பூப்பச் செய்தார்.
வானளவு கலைக் கோயிற் புறங்கடையி
லருளென்றும் வெண்பூப் பூத்துத்
தேனளவு நறும் பொழிலும் செய்குன்றும்
மலர்த்தடமும் செய்திட் டாரால்.

பின்னர்

தெய்வநன் னலங்கள் செறிந்திடு புலவர்
கோயிலி லணிகள் குயிற்றிட லானார்.
சிலர், சங்கத் தெடுத்த தவி நுண் சுண்ணம்
எங்கும் பூசி யெழிலை வளர்த்தனர்.
சிலர், தலந்தொறும் குறண்மணி தகவுறப் பதியா
உளங்களிப் பூறி யுவப்பின் மூழ்கினர்.
வண்ணம் பூசியும் மாலை நாற்றியும்
சுண்ண மிறைத்துந் துளும்பினர் சிலரே.

அமிழ்தின் இனிய
தமிழர் தவத்தால்

நலம்பெருக் கிடுமுத் தமிழ்க்கலை தேர்ந்து
நவையில் சிரியை யிளங் கோமெய்ச்
சிலம்பிசை யன்பின் முழக்கினர் யாண்டும்
தெய்வமே துளும்பிய தம்மா !

பின்னர், உள்ளியை யிருளின் கணமெலா மோடி-
யொளித்திட இடந்தொறுந் தெய்வ
வள்ளுவ னருட்பூங் குறள் விளக்கிட்டான்
மாநிலம் வணங்கிய தம்மா !

கம்பன், கலைப்பெரு மாட்டிக் கரியணை தெய்வக்
கவிஞருக் கமிழ்துசெந் தமிழ்த்தாய்
தலைக்கொரு மகுடந் தந்தனன் ; வெள்ளைத்
தலைவியும் பணிந்தன ளம்மா !

அவந் தொ லைந்திடப்
பவம்ப ரிந்திடத்
தவம் க ளிந்திடச்
சிவம் வி ரும்பியே

அடியெ டுத்துமு னளித்திடப் பெற்றவன்
கொடியெ டுத்தனன் கோவில் பொலியவே
தண்டமிழ்க் கோயிலின் தகவெலா மறிந்துளம்
கொண்டனள் கோயிற் குடிபுகும் எண்ணமே.

பின்னர், அலைவளரு மிப்புவியி லீடற் றோங்கி
யணிக்கெல்லா முறைவிடமா யமையுமிந்தக்
கலைவளரும் பெருங்கோவில் கண்டுவந்து
கலையரசி குடிபுகுந்தாள் காண்மின் ! காண்மின் !
காவியஞ்செய் பெரும்புலவர் கனிவினேத்திக்
கவிமாலை புனைந்திடப்புன் னகைபூத்தின்ப
ஓவியங்கண் டுளம்பூரித் தமுதளாவி
ஒளிர்கோயில் குடிபுகுந்தாள் காண்மின்! காண்மின்!
பன்னிருவ ருடன் நால்வர் அளித்த தெய்வப்
பாவமுத மினிதுண்டு பரிவி னோடும்
நன்னயஞ் சால் கோயிலின்கண் குடிபுகுந்து
நவையற்ற மகிழ்வுற்றாள் காண்மின் ! காண்மின் !

இங்ஙனம் மகிழ்வோ டெழிற் கலைக்கோயிலில்
மன்னிய தேவி மாணல மெய்தி
வாழ்ந்தனள் பின்னுள் மலைபோல்

(2 தாழ்வு) சூழ்ந்தது துயரம் சுடர்க்கோ யிற்கே
மக்களிருண் மனம் என்னும் மண்மீதிற் றம்முளத்தைப்
புக்கழிக்கும் சூழ்ச்சியினைப் புதைத்தார்கள் சிலகயவர்.
அறியாமை யெனும் புனலு மாய்வின்மை யெனுமுரமும்
நிறைய நுகர்ந் தவ்விதைதான் நெடியமர மாயிற்றால்.
வள்ளுவனு ரலகை யென மனங்கசந்து வாய்கசந்து
விள்ளவரு தீயவரிவ் வெறிமரத்தைக் காத்தனரால்.
அம்மரத்திற் போலியறி வாங்காய்கள் ஆராயும்
செம்மையிலார் தமை மருட்டித்திசைதோறுந் தூங்கிய
கிளைதொறும் நிரம்பிக் கிளர்ந்தவிக் காயைத் [தால்
தின்றவர் அனைவருந் தெளிவிழந் தயர்ந்தனர்.
தமிழகத் தினையே தாழ்த்திக் கெடுக்கக்
கங்கணங் கட்டினர் கயமை வளர்த்தனர்.
பண்டைப் புலவர் பகர்ந்தன வனைத்தும்
என்றைக் கும்மிழி வியற்று மென்றனர்.
கோதி லாக்கலைக் கோயிலை யிடித்துப்
பூமியிற் பரப்பிற் புதுமை பூக்கும்
ஆதலா லிதுவே யழகி தென்றனர்.
தம்முளத் தினிலே தளிர்த்த விடத்தில்
காவியம் நாடகம் கட்டுரை யியற்றி
எங்ஙனும் பரப்பி யிழிவைப் பெருக்கினர்,
கட்டினி தாகக் காணப் பட்டு

நாவிற் பெய்யின் நனிமிகக் கசக்கும்
எட்டிநேர் சொற்களைக் கொட்டி யளந்து
பிஞ்சு மனத்தினில் நஞ்சு நிரப்பினர்.
பண்டிரு மக்களுட் கொண்ட கனியால்
உண்டதீங் கின்னு மொழிந்தி லதிவர்கள்
கனிநுகர் பாவம் கழிவ தென்றோ ?
இக்கனி நுகர்ந்தோ ரியல்பினைக் கேண்மின்.
வளஞ்சாலுந் தமிழகமே மலிரிட்டுப் பணிகின்ற
இளங்கோவு மிவர்நோக்கிற் கிழிவுடையா ரென்சொல்
கேன்.
உம்பரெலாம் வியந்தேத்து மொளிர் புகழைத்தமிழ்க்
களித்த
கம்பர்பிரான் புகழமுதுங் கசந்ததிவர் வாய்க்கந்தோ.
பாக்கிழா ரெனச்சிவமே பரிந்தேத்துந் தெய்வீகச்
சேக்கிழா ரருள் நூலுந் தீதாமித் தடியர்க்கே.

இவர்களாற் றமிழக இயல்பே மாய்ந்தது
நன்றெலாந் தீதாய்த் தீ தெலாம் நன்றாய்
மாறியே தோன்றின மக்கள் விழிக்கே.

தண்டமிழ்த் தேவி யிந்தத் தகவிலார் கொடுமை யாவும்
கண்டனள் மனம்கலங்கிக் கண்கணீர் சொரிந்திட்
[டாளால்
செயற்கருஞ் செய்கையாவும் செவ்விதிற் செய்யுமந்த
இயற்கையு முளங்கலங்கி என்னிதன் முடிவோ என்றாள்.
பொய்தபு முளத்தி னோர்க்குப் புலப்படுகின்ற அந்தத்
தெய்வமும் சேவித்த தென்றால் செப்புவ தின்னு மென்னு

தெளிவற்ற தீயர்செயல்—ஒளியுற்ற கலையரசி
கண்டுள்ளம் கனலானுள் — நன்றென்றுள் நவையற்றுள்
விரியறிஞ ரகமென்னும்--அரியணை நின்றுடனெழுந்தாள்.
கோயின் முற்றம் — மேவி நின்றுள்
தீயர் செய்திடு — மாயங் கண்டாள்.

அன்ன நிலையிற்

பின்னிவை கூறினள்.

மண்டலமே தந்தாலும் வாங்கற் கரியவந்தக்
குண்டலத்தைப் பேறுக் குறையா லிழந்தேன்முன்
வணங்கா முடிக்கூத்தன் வன்னெஞ் சையுமுருக்கும்
குணஞ்சால் வளைபோய்க் கொடுவிதியால் நைகின்றேன்.
இரைக்குங் கடற்கு மெரிக்கும் பகைக்கும்
அரிக்கும் சிதற்கும் அளித்தேன் கலையை
ஆடிப் பதினெட் டழித்த கலையெல்லாம்
கோடிப் புலவர் குயிற்றத்தான் வல்லுநரோ

இன்று

பேரறி வில்லாக்

காரறி வுடையோர்,

உம்பர் பிரான்றனொளிர் கடலிற் கிட்டாத
கம்ப ரமுதைக் கவிழ்த்துக் கெடுப்பாரோ ?
நலஞ்செ யிளங்கோ நவையற் றிடத்தந்த
சிலம்பை யுடைத்துத் தெருவிற் பரப்புவரோ ?
சிவம் பெருக்குஞ் சேக்கிழார் தெய்வீகத்தேனை
யவம் பெருக்குந் தீய ரழித்துச் சிதைப்பரோ ?

தமிழர்காள் !

(வேண்டுகோள்)

இஃதெலா முள்ளி யேங்கு மென்னைக்
காக்க இன்றே கங்கணங் கொண்மின்.
மற்ற நாட்டார் பெற்ற கலையைச்
செவ்வி குன்றுமற் றிரட்டிக் கொண்மின்.
காளி தாசன் கவினுறு மில்டன்
பொற்பு சான் றிடுசெக சிற்பியே முதலோர்
வனைந்த கலையை வடிமின்! தமிழாய்

இன்றும்

நல்லுருவாங் கலைக்கோயில் நாசமுறப் புரிகின்ற
புல்லுருவிக் கூட்டத்தைப் பூண்டோடு களைந்திடுமின்.
நிலைக்கமுகு தருகின்ற நெடும்புகழ்சான் றிடுமேலாம்
கலைக்கழகத் தினில்நஞ்சு கலவாமற் காத்திடுமின்.
சொல்லூறு நாவுடையார் சோர்வகன்று மேவுகின்ற
கல்லூரி தனைப்பாம்பு கவராமற் பார்த்திடுமின்.
பீடைகளும் கொடும் பிணியும் பேசாமற் செய்யதமிழ்
மேடைகளைக் காத்தறிவு வீற்றிருக்கச் செய்திடுமின்.
குற்றங் களையுங் குறைக்குந் திறலுடையீர் !
மன்றங் களிலே மடையைத் திறந்திடு மின்.
இளம் புலவர் தங்க ளியல்பறிந் தன்னூர்கள்
வளம் பெருக வூக்கங்கள் வாயாரத் தந்திடுமின்.
விருப்போ டிளம்புலவர் மெல்ல முளைத்துவரின்
செருப்பிட்டுத் தேய்க்கின்ற தீத்தொழிலை விட்டொழி
நீரளிக்கும் ஊக்கமே நீரா யிளம் புலவர் [மின்.

பாரளிக்க ஓங்கிப் படர வழிகாண்மின்.
கோளரி போன் மானக் குலவீர ராயிரவ
ராளரிபோற் றுேன்றி யருட்டொண்டு செய்திடுமின்.
அடுக்கடுக்காய்த் துன்பங்க ளலையலையாய் வந்தெதிர்ப்பின்
மிடுக்கன்விவே கானந்த வீரனை நெஞ்சிடை நினைமின்
மெய்ஞ்ஞான நூற்கணத்தை மேற்புலத்தார்க் கீந்தவர்பால்
விஞ்ஞான நூற்கணத்தை மெய்வருந்திக் கற்றிடுமின்!
விழித் தெழுமின்! குழற்கண்ணன் மெய்க்கீதைப் பாதையிலே
உழைத்திடுமி னருட்கலைக ளோங்க விரைந்திடுமின்!

இங்கனம்

வானவர் பணிய வயங்கிடுந் தெய்வக்
கோலமார் கலைக்கொடி கூறினள் யாண்டும்
நறுங்கலை வளர்ந்து நானிலத் துயிர்க் கெலாம்
ஒருங்கின் பளித்த துவகையின் மாதோ !

நலந்தழைக.

எதுகலை ?

ஏளங்கு மதியில் விரவித் தளிர்த்த
களங்கம் துடைக்கும் கலையே கலையாகும்.
மல்கும் புயல்சூழ் மனக்கடற்கும் பேரமைதி
நல்கும் கலையே நயஞ்சால் கலையாகும்.
தோட் குன்றில் வீரமெனும் தூயநதி யோடச்செய்
பூட்கைக் கலையே புதுமைக் கலையாகும்.

---

ஓம்

வானப் பரப்பிற் றிங்களென
    வருவாய் ; கடலின் மிளிர்ந் தொளிர்வாய் ;
கானப் பரப்பிற் பேரின்பம்
    கலப்பாய் ; மகளிர் கருங்கண்ணும்
பானற் பரப்பில் நறுங் கவிதை
    பாலித் தருள்வாய் ; என்னுளத்து
மோனப் பரப்பில் வீற்றிருப்பாய் ;
    மூவாக் கலைமான் வாழியவே.

---

நவையுறு சொற்கும் நன்முக மளித்த
அவையீர்! நுங்கட் கன்புரித் தாருக.
கம்பன் வழியிற் கலைகள் வளர்ப்போம்.
வாழ்க தமிழ் !

---

ஸ்ரீ

சீதாபதிதுணை.

திருவாளர் பெ. இராமாநுஜன் அவர்கள்.

# கலை

---

ஆரும் கலைமகளாம் ஆரணங்கைப் பாராமல்
நாளெல்லாம் வீணாய் நலமற்றிருந்து விட்டேன்
எங்கெங்கும் தேடி இளைத்து அலுத்துவிட்டேன்
மங்கை யவள்தன் மதிமுகம்நான் கண்டிலனே
மெய்யாக நன்கலையாம் மெல்லியலைக் காணமல்
ஐயோநான் வீணு யலைந்தேன் பலகாலம்
கோலமெல்லாம் கெட்டு குலைந்துதடு மாறிநொந்து
காலமெல்லாம் போக்கிக் கலங்கி மனம்சலித்தேன்
பள்ளித் துணைவன் பரந்தாம னைப்பார்த்து
எள்ளில் கலைமகளை எங்கேனும் கண்டாயோ
சொல்லென்று கேட்டேன். தோழா அறிந்திலையோ?
புல்லின் நுனியில் புனைமூங்கிலி னிலையில்
காலை யிளம்பரிதி கைநீட்டி வாராமுன்
கோலக் கதிர்முத்தம் குப்புற்றொளிர்வதுவே
என்றுரைத்தான் யானும்எதிருரைத்தேன் இம்மாற்றம்
நன்றுரைத்தா யல்லை நயனில் மொழிபகர்ந்தாய்
கலையன் றது அவளின் கண்ணீர்த் துளி, தனது
நிலையறியா மாந்தர் நிலையெண்ணி யேங்குகின்றாள்;
மறுமலர்ச்சி யாளர் மறுவேதும் இல்லாதார்

பிறிதொருநாள் கண்டேன் பெரும்பேச்சுக் காரரவர்
ஐயா கலைமகளை அவனியிலே யெங்கேனும்
மெய்யாகக் கண்டிருந்தால் விளம்பிடுவீர் என்றேன்நான்
கோல மயிற்சிறகில் குக்கூவெனக் கூவும்
நீலநிறக்குயிலின் தீங்குரலில் நெற்கதிரைக்
கோதும் கிளியில் கொவ்வைக் கனிமூக்கில்
ஏதும் அறியா எளியவரைபோல் ஏமாந்து
வாடி யிருந்து வரால்மீன் வரக்கண்டு
ஓடி நெடுமூக்கில் குத்தி யுதறுகின்ற
செங்கால் வெண் தூவிச் சிறைக்குருகில் மற்றதனைத்
தன்காலால் தட்டிப் பறித்துத் தனிவிசும்பில்
சிறகடித்துச்·செல்லுகின்ற செங்கண் பருந்தினிலே
புறவடுத்து வாழுகின்ற புள்ளின் சலசலப்பில்
காடைச் சிறகில் கரிக்குருவி வாலசைப்பில்
மாடப் புறாவின் மணிக்கழுத்தில் மற்றுங்கேள்
துள்ளிக் குதித்தோடும் புள்ளிமான் கன்றினிலே
புல்மேய்ந்து உச்சிப் பொழுதுமர நீழலிலே
செம்மாந் தசைபோடும் தெய்வப் பசுநிரையில்
அந்திப் பொழுதில்தம் கன்று நினைவுமிக
அம்மா என அழைத்து ஆதரத்தோ டோடிவரும்
ஆநிரையில் கண்டத் தசைமணியின் ஓசையினில்
நீலக் கடலினிலே நீண்டு சுருண்டெழுந்து
ஓலமிடும் பேரலையில் ஓமென்னும் காற்றினிலே
வட்ட முழுமதியில் வான்மீன் வரிசையினில்
கொட்டும் மழையில் குமுறுங் கருமுகிலில்
கண்ணைப் பறிக்கின்ற மின்னல் கொடியினிலே
வண்ண மலர்த்திரளில் வண்டின் இசையினிலே

கண்டிலிரோ நண்பீர் காரிகையார் கூர்விழியில்
கண்டிடுவீர் நீண்டு கறுத்திருண்ட கூந்தலிலே
முல்லையையும் முத்தினையும் வெல்லும் முகிழ்நகையில்
மாசற் றொளிரும் மதிமுகத்தில் மற்றவர்கள்
பேசும் மொழியில் பிறங்கும் நுசுப்பினிலே
என்றுரைத்து மேலும் இயம்பத் துவங்குகையில்
நன்றுரைத்தீர் ஐயா நாளைபிற கேட்டறிவேன்
என்றவர்பால் நின்றடியேன் ஏகிவிட்டேன் மற்றொருநாள்
ஆங்கிலமும் தெய்வ அருந்தமிழுங் கற்றுபுகழ்
ஓங்கும் அறிஞர் ஒருவரையான் கண்டணுகி
மெல்ல எனது விருப்பைத் தெரிவித்தேன்.
நல்லதே கேட்டீர் நவிலுகின்றேன் முன்னொருநாள்
மேலாடை வீழ்ந்ததெடு என்றானும் அப்பொழுதில்
நாலாறு காதம் நடந்ததென நாம்படித்தோம்.
காலால் நடப்பதன்றிக் கட்டைவண்டி கூட அன்று
எலா திருந்ததும்பர் ஏகும் விமானமெங்கே ?
தண்ணிருள் மூழ்கித் தவந்தான் புரிவாராம்
தண்ணீரிலே முழுகிச் சஞ்சரிப்ப தென்பதெங்கே ?
வண்ணச் சுவையை வகைவகையாய்க் கைக்கொண்டு
கண்ணீர் கலங்கக் கழுத்தொடிய நம்மவர்கள்
சிவியத்தில் பன்னாள் சிதைத்து எழுதுவதே
ஓவியமென் றன்னோர் உள்ளம் உவந்தார்கள்,
கண்ணிமைக்கு முன்பே கருதரிய சித்திரமாய்
எண்ணிறந்த வண்ணம் இயைவதிங்கு எப்போது ?.
அத்திரமும் சத்திரமும் ஆள அவை யத்தனையும்
இத்தரையில் நம்மவர்க்கின் றேதும் பயனிலைகாண்.
செத்து மடிவதற்கும் சீவித் திருப்பதற்கும்

முத்தொழிலைச் செய்யும் முதல்வரைநாம் கண்டதில்லை.
கண்ணால் கருத்தால் கருதரிய ஒன்றினையே
எண்ணிக்கொள் என்று இயம்பிவிட்டார் நம்மவர்கள்
மற்றதனைக் கொண்டிங்கு குற்றேவல் செய்விக்க
ஆகுமோ சொன்னால் அதிசயமென்றே யுரைப்பீர்.
மண்ணிலணு வென்றுரைப்பர் மற்றதன்றன் மாட்சியினைக்
கண்ணிலின்று கண்டுவிட்டோம் காட்சியிங்கு நம்மிலில்லை
கள்ளவிழுங் கூந்தல் கலைமகளைக் காண்பதென்றால்
வெள்ளைய ரென்றெள்ளும் வெளிநாட் டவரிடையே
அன்னவளைக் காண்பீர் அரியாசனத்தின்மேல்
சொன்னேன் இனும்சொல்வேன் பின்னொருநாள் என்று
மெல்ல நடந்தார் மெதுவாக நான்பிரிந்தேன். [சொல்லி
எல்லாம் மயக்கமெனக் கேதும் புரியவில்லை.
கண்டேன்மற் றோர்நாள் கணக்காயரைத் தெருவில்
கொண்ட மனக்குறையைக் கூறிவணங்கி நின்றேன்.
தொண்டா! அறிந்திலையா சொல்லுகிறேன் சற்றேகேள்
என்று செறுமி இருமிக் கனைத்துரைப்பி.

---

அறுசீர் விருத்தம்

இகத்தில் அடையும் சுகத்தினுக்கும் இருவான்கதிக்கும்
துணைசெய்யும்
அகத்தில் அவளை யறிதலன்றிப் புறத்தில்காண்டல் அரி
தாகும்

சகத்தில் அவள்சார் பில்லாமல் தனித்தெப் பொருளும்
தோன்றாது
தொகுத்துச் சொல்வேன் புறக்கண்ணில் தோன்றும்
வகையில் அறிந்திடுவாய்!

---

## எழுசீர் விருத்தம்

கல்வியில் வல்ல பெரியவர் கூடும் காமரு சபையினி லவர்தம்
சொல்வலி காட்டிப் பேசிடும் பேச்சில் சுருதிநூல் முழங்
கிடும் அரங்கில்
எல்லியும் மதியும் அவிரினும் அவியா இயலிசை நாடகத்
தமிழாம்
அல்லியங் கமலத் தமனிய பீடத் தணங்கினை யறிகிலை
போலும்!

---

## பதினான்குசீர் விருத்தம்

வள்ளுவன் முப்பால் மணிமுடி தரித்து வயங்குசிந் தா
மணிபூட்டி
வளையொடு குழைகள் மிளிர்தர வாசங் கமழ்தரு மாலை
யும் வேய்ந்து
தெள்ளிய தேவா ரத்தொடு தெய்வக் கோவையும் அழகுறப்
புனைந்து
திகழ்தரு மணிமே கலையினை யிடையில் செறித்துமற்
றெண்சிலம் பார்ப்ப

எள்ளல் இலாத திருமொழி பேசி யெதிரெதிர் புலவர்கள் ஏத்த
இணையறு புலமைத் திறமிகு கம்பன் இயற்றிய எழில் மிகுகாவில்
புள்ளினம் சிலம்பப் புதுமலர் விரிய புன்னகை யுடனடந் துலவும்
பூவையைத் தெய்வப் பாவையை யின்றே புதுமலர் கொடுபணிந் துய்வாய்.

என்றுரைத்தார் யானும் இறைஞ்சிவிடைகொண்டகன்றேன்
ஒன்றும் புரியவில்லை ஊமையினைப் போலொடுங்கி
தன்னந் தனியே சலித்திருந்த போதினிலே
எவனோ வழிப்போக்கன் சிந்திப்ப தென்ன என்றான்
கவலை பெரிது கலையினை நீ கண்டதுண்டோ ?
என்றேன் அவனும் இடியிடியென் றேசிரித்து
நன்றாக நீர்கேட்டீர் நாட்டம்உமக் கேனிதிலே
வேதாந்தம் என்றுவிளம்பிடநீர் கேட்டிருப்பீர்
வேதாந்தந் தன்னை விரித்துரைக்க ஏலுமோ ?
பற்பலபேர் கூடிப் பகல்முழுதும் பேசிவிட்டு
ஒன்றும் புரியாமல் ஓமென்றுரைத் தெழுந்து
போவதுதான் வேதாந்தம் போலும்நீர் கேட்டகலை
ஆவதுமவ் வாறே யகல்வீர் அமைதியுடன்
என்னப் புகன்றவனும் ஏகினான் தன்வழியில்
சொன்னவகை யெல்லாம் தொகுத்தெடுத்துக் கூறிவிட்டேன்
கொண்ட மயக்கம் குறையவில்லை மற்றவனைக்
கண்டு தெளிவுபெறக் கல்வியினில் மிக்கவரே
புல்லறிஞ னுக்கும் புரியும் வகையினிலே
சொல்லிடுவீர் உம்மைத் தொழுதுவிடை கொள்கின்றேன்.

---

வித்துவான் ச. கணபதி ரெட்டியார்

# கலை

---

நீர்வளம் நிலவளம் நிறைவுறு மேர்வளம்
குடிவளம் மலைவளம் குறைவில தாகிய
பல்வளம் பழுநிய கொல்லியின் கீழ்பால்
மா பலா தென்னை மாண்புடை வாழை
நாகிளங் கமுகுநற் றுழை முதலிய
நானு மரங்களும் நாற்புறஞ் சூழ்ந்து
வானுற ஓங்கி வளம்பெற வளர்ந்த
சோலைகள் விரவிய சுடரொளிப் பச்சைக்
கம்பலந் தன்னைக் கவினுறு நிலமகள்
போர்வையாப் போர்த்துப் புத்தொழில் தோன்ற
பார்வைக் கினிய பாங்காய் மிளிரும்
வயிரி செட்டிப் பாளையந் தன்னில்
செயிர்தீர் காட்சிச் செம்மல் உள்ளம்
பெற்ற பெருமகன் பெருங்குடி வந்தோன்
நாக விரட்டியர் நற்பெருந் தலைமையில்
இவ்வூ ராரெலாம் இணைந்தே ஒன்றாய்
வேற்றார் செல்வரும் விழைவுடன் பணிசெய
ஏற்றே அவரையும் இசைவுறக் கொண்டு
செயற்குழு நிறுவிச் செயற்கரும் செயல்கள்
செய்தநம் பெரியார் சீரிய விவேகா
நந்தர் பெயரால் நன்கன மமைந்த
உயர்நிலைப் பள்ளியை உடனே தோற்றி

ஆசிரியர் மாணவர் அனைவர்ஒத் துழைப்பும்
ஒன்று சேர்ந்து ஒன்றி நிற்க
ஓராண்டு சீர்பெற ஒழுங்காய் விடுதலை
நன்னு ளதனையும் நந்தம் பள்ளி
ஆண்டு விழாவையும் அழகுற நடாத்தி
நின்றனர்! இன்று நிகழ விருக்கும்
கலைவிழா தன்னைக் கருதிச் சிறப்பாய்
நிகழ்த்த நின்றுள்ளர்! நின்றுளேம்!! பெரியீர்!
பேரன் புடையீர்!! பெற்றதாய் மார்காள் !!!
சிரிய நல்லிளஞ் சிங்கச் செம்மலீர் !!!!
ஈண்டிவ் விடத்து ஈண்டி யுள்ளீர்!
மாண்டஎம் பள்ளி மாப்பெருங் கலைவிழா
காண்பான் புக்குக் கருதிப் போந்து
கற்றேன்றி மண்ணிலாக் காலத்து வாளொடு
முற்றோன் றியதொன் மூத்த குடியெனும்
தமிழன் அன்று தனிப்பெருந் தலைவனாய்
நானில மாண்டதை நானெதற் கியம்ப
வேண்டும் நீவிர் விரிவாய் அறிவீர்!
அன்றிவண் வழங்கிய அணிகொள்வண் பழமொழி
தமிழே என்னத் தக்கதும் தெரிவீர்!
அப்பழ மொழியின் அழகெலாங் கண்டு
கண்டே என்னக் கருதி உண்டு
பொன்றாப் புகழுடன் பொலிந்து நின்று
வாழ்வுபெற் றுளிர்கலை வளம்பெறு புலவர்
பல்லோர் வாழ்ந்த பழம்பெருந் தமிழகம்
தன்னை நினைக்கவென் நெஞ்சம் இனிக்குதே
முடித்தமிழ் வேந்தர் மூவர்முன் னின்று

இமிழ்கடற் பாரில் இறவா தொளிரும்
அமிழ்தினு மினிய அந்தமிழ் மொழியை
முண்டநல் லன்பொடு முறையாய் வளர்த்தனர் !
பாவலிர் அஞ்சலிர் ! காவலர் யாமுளேம் !!
என்றே ஊக்கி இருந்தனர் ! பண்டு
இயலிசை கூத்து எனுமுத் தமிழையும்
எண்ணெண் கலையையும் ஏற்றமாய் வைத்துக்
காத்தனர் ! நந்தம் காவலர் பாவலர்
செல்வர் கொடையிற் சீரிய வள்ளலர்
இப்பழ நாட்டை இரக்கமோர் சிறிதும்
இலாதே அழித்து இடுக்கண் விளைத்த
முந்நீ ராழியை முனிகுவம் எனிலோ
அன்னதால் என்பயன் ? அழுங்கலால் தீருமோ ?
கழிந்தவை தமக்குக் கலங்கி வருந்தான்
உரன்பெறு உள்ளம் உடையான் என்ற
பொன்னுரைக் கேற்ப போகட் டவைகளை
இனிவருங் காலம் எண்ணி வாழ்வோனும்
பண்டுபோல் இன்றும் பைந்தமிழ் மொழியையும்
கலைகள் தம்மையும் கருத்திற் கொண்டு
போற்றி வளர்த்துப் புரந்து நிற்க
எண்ணிலாச் செல்வர் இல்லா விடினும்
நந்தம் நாக விரட்டியர் போன்று
வந்துளர் ! சில்லோர் வண்புகழ்ச் செல்வர்
தந்தோம் எம்பொருள் தமிழ்க்கலை வளர
என்றே இயம்பி எடுத்துரை கூறும்
அந்நற் செய்தியால் அகங்களிக் கின்றேம் !
பன்னரும் பலமொழி பரப்பி உரைத்தனே !

உந்தம் பள்ளி உயர்செயல் யாதோ?
என்னக் கேட்பீர்! இயம்புவன் இஃதோ!
முத்து சிவனார் முன்னிய தலைமையில்
கவியரங் கேறிக் கழறுவன் மாதோ!
ஆசிரி யப்பா வமைத்துக் கேட்போர்
ஆ! சிரி யப்பா என்ன வமைய
ஆசு இரிய அரிய பாவென
ஆஅ சிறியன் ஆசிரி யன்னே
தமிழா சிரியன் தகுதியில் கணபதி
அளிப்பன் அரங்கிடை அமர்ந்துளி ரேற்றுக்
கொள்க! கொள்க!! குறைபல நீக்கி
எந்தம் பள்ளி இனிய நல் லூறுப்பினர்
அனைவரும் மாணவர் அகவிருள் போக்கி
நிற்ப தன்றியும் நிகழ்வெதிர் காலம்
இவ்வூர் தன்னில் இனியநற் கலைவிழா
ஆண்டு விழாமுதல் அழகிய பலவிழா
ஆண்டுகள் தோறும் அழகுறச் செய்வோம்!
எந்தம் சுற்றுப் புறமுள சிற்றூர்
நடுவுள பட்டி நகரந் தொட்டி
முதலிய விடமெலாம் முடுகிச் சென்று
வாரந் தோறும் வகையாய்த் தமிழ்ப்பயிர்
வளர்த்து நிற்க வழிசெய் துள்ளோம்!
ஊர்ப்புறந் தூய்மை உடல்நல வழிகள்
முதியோர் கல்வி முன்னிய நாட்டைப்
பற்றிய செய்திகள் பகர வொண்ணு
நூற்கரு வூல நூல்கள் அளித்தல்
மருத்துவ உதவி முதலிய பற்பல

துறைகளி லெல்லாம் தவறு துழைப்போம்!
மாணவச் சிறுர்பயில் மாணவ ரில்லம்
அம்மா ணவருடன் அண்டி வாழும்
ஆசிரி யச்செய்யும் ஆசிரி யர்சூழ்
பணிமனை யாமிது பணியொடு இவனுள
பல்வகை உறுப்பினர் பண்புடை நிறுவனர்
பொறுப்பாளி யன்றியும் புகழ்செயற் குழுவினர்
பள்ளிநிலை யுயரப் பகலிரா உழைப்போர்
உழைக்கமுன் வருவோர் ஊக்கு விப்போர்
ஆகிய உறுப்பினர் அனைவரும் பணிமனைத்
தொண்டர்க ளாவேம்! தொண்டே எங்கள்
வாழ்வின் குறிக்கோள் வளம்பெறு தமிழ்க்கலை
உயர நாளும் அயர்விலா துழைப்போம்
என்றே நும்முன் இனியசூள் கூறுதும்
அச்சூள் தம்மை அறையக் கேண்மோ!
மக்கட் கூட்டம் மாக்கள் நிலையில்
மன்னி யிருந்து மாறிப் பின்னர்
அறிவுச் செல்வம் ஆர்ந்து நிறைந்து
சீர்பெறு வாழ்க்கை சிறப்பாய்ப் பெற்று
இயற்கை எழிலை இனிதின் உணர்ந்து
கண்ட காட்சியில் கருத்தினைப் பதித்து
எழிலுறு முலகிற் கெடுத்துக் காட்ட
தூரிகை கொண்டு தூயகைத் திறத்தால்
வண்ணம் கலந்து வண்ண ஓவியம்
வரைய இயற்கையும் வளைந்து நாணும்
வகையாய் அமைந்தது வனப்புறு கலையாம்.

பார்புகழ் பழந்தமிழ் மக்கள் அந்நாள்
பறவை விலங்கு பைந்தழை வண்டு
தழையொடு மூங்கில் தாமிவை இசைக்க
அதனைக் கண்ட அருந்தமிழ் மக்கள்
தங்கள் இசையில் தழுவி இசைத்தனர்
இதனையே உலகு இசைக்கலை என்றது.
வளர்பிறை எனவே வளர்ந்த வண்டமிழ்
அறிஞர் தங்கள் அறிவின் மாண்பால்
வளமும் வாழ்க்கைப் போக்கும் உளமும்
காணக் கதையாய்க் காவியக் கலையாய்
ஆக்கி அளித்தே அழகுறச் செய்தனர்.
கலைஞன் தனது கழறற் கரிய
கற்பனை உலகில் கைத்திறன் கூட்டி
இயற்கையைத் தன்வயம் இழுத்து இயக்கி
விஞ்சிய நிலையில் வியத்தகு செயல்கள்
எஞ்சா வாறிவ் வுலகில் இயற்ற
மாற்றார் மனமது மகிழும் வண்ணம்
எழிலின் எல்லையை ஏற்பது கலையாம்.
போலியே யாயினும் பொலிவொடு விளங்கும்.
நாட்டின் உயர்வு நலமுறும் கலையால்.
பண்பா டுயர பளிங்கனை யறிவு
மேனிலை உற்று மிளிறும் கலையால்.
இறைமைப் பண்பினை இதனால் அறிவாம்.
கலைபல உயரக் கருதி அனைவரும்
உடல்பொரு ளாவி உவந்தே அளித்து
காத்து நிற்போம் கலைகள் தம்மைக்
காவா தொழியின் கலையும் கலையும்.

தமிழுங் கலையும் தழைத்துச் செழித்திட
தமிழர்காள் நாமெலாம் தளரா துழைப்போம்.
தளர்ச்சி அடையின் தமிழும் கலையும்.
ஓவியம் சிற்பம் உயரிய உழவு
வாணிபம் கணிதம் வானநூற் புலமை
மெய்ப்பொருள் நூல்கள் மேலாம் வியத்தகு
செயல்கள் செய்யும் சீரிய அறிவியற்
கலைகள் பேச்சு காவியம் நெசவு
இசையொடு கூத்தென் றின்னபற் பலவாய்
எண்ணெண் கலைகள் இனிதின் ஓங்கிட்
பண்டுபோல் இன்றும் பாங்காய் வளர
எட்டுத் திக்கரும் இணை இவை கட்டு
இலைபிற நூல்கள் என்றே இயம்பும்
எட்டாப் புகழ்பெறும் எட்டுத் தொகையும்
பகர்தற் கினிய பத்துப் பாட்டும்
பதித்தென் ணத்தகும் பதினெண் கீழ்க்கணக்
காமெனு நூல்களு மமையப் பெற்று
சிந்தா மணியெனும் சீரிய திருமுடி
சிலப்பதி காரமாஞ் சிதையாச் சிலம்பு
மணிமே கலையெனும் மாண்புடை மேகலை
வளையா பதியெனும் வளையாச் செங்கோல்
குண்டல கேசியாம் குறைவறு காதணி
ஆமிவை பெற்று ஆட்சி செலுத்தும்
தன்னிக ரில்லாத் தண்டமிழ்த் தாயின்
மன்னிய உயிர்நிலை மாமறை திருக்குறள்
நாலடி யாரெனும் நல்லகா லணியாம்
நன்னூல் பன்னூல் நவில வொண்ணாத்

தொன்னூல் சின்னூல் தோமில் நூல்கள்
பற்பல வற்றையும் பகலும் இரவும்
முற்ற முடிய முனியா தோதிக்
கற்றுத் தெளிந்துபின் கருதற் கினிய
பிறமொழி களையும் பிழையறக் கற்று
அம்மொழிக் கலைகளை நந்தமிழ்ப் படுத்தியும்
நந்தமிழ்க் கலைகளை நானு மொழியுளும்
கொண்டு செலுத்தியும் குறைவிலாப் புதுநூல்
இறவாப் புகழுடன் என்றும் நிலமிசை
நின்று நிலவிட நிகழ்த்துவம் நற்பணி!
செய்திறப் புலமையால் மொய்பிற நாட்டார்
மெய்யாய் அதற்கு மேதகு வணக்கம்
செய்திட நன்னூல் செய்குவம் வாரீர்!
அத்தகு நூல்களை
கல்லார் பல்லோர் தமக்கும் பயிற்றிக்
கலந்து மகிழ்ந்து களித்து வாழ்குவம்!
இறுதியில் ஒருரை அறுதியிட் டுரைக்குதும்
நிதிமிகப் பெற்றுளீர்! நிதிக்குவை தாரீர்!
நிதிகுறைந் துள்ளீர்! நினைத்தெணிக் காசையும்
அதுவு மற்றவர் அரியவாய்ச் சொல்லையும்
ஆண்மை யாளரீர்! அரியநும் உழைப்பையும்
பல்வகை யானும் நல்கிநற் கல்வியால்
வீடெலாம் கலையின் விளக்கவ துறவும்
நாடுகள் முற்றிலும் நனிமிகு மூர்கள்
நகர்க ளெங்கணும் நாடும் பற்பல
பள்ளிக ளமைத்துப் பலகலை பயிற்றியும்
நானிலம் மேன்மை யுற்றுநல் வாழ்வு

வாழ வழிசெய் திடுவோம் வம்மின்!
பஞ்சம் பட்டினி பசியெனு மிவைகள்
கொஞ்ச முந்தலை காட்டா தொழிந்து
பறந்து செல்லவும் பார்செழித் திடவே
மழைவளங் கூர்ந்து மாட்சிமை யோடு
நாடு நல்வளம் நனிமிகப் பெற்று
வசியும் வளனும் வகையுடன் சிறந்து
பகுத்தே உண்டு பல்லுயி ரோம்பி
மக்கள் மனவளம் மாண்புறப் பெற்று
அன்பும் அறனும் அறிவும் ஆண்மையும்
அருளும் ஈகையும் அறியகைத் தொழிலும்
ஆர்ந்து நிறைந்து அழகுடன் திகழ்ந்து
வாழ்கவிவ் வுலகில் வாழிய! நெடிதென
வாழ்த்துவ தன்றியும் வந்திவ ணுள்ள
எந்தம் அன்பிற் கேற்ற கூட்டத்
தனைவர் தமக்கும் தக்களம் பள்ளி
நிறுவனச் சார்பில் நிறுவினன் நன்றி
கூறி நின்றே கொள்வீர் வணக்கம்!

---

தபோவன அச்சகம், திருப்பராய்த்துறை.